# 25 கதைகள்

மாணவர்கள் எழுதிய கதைகள்

வெளியீடு
இளம் வாசகர் வட்டம்
அறிஞர் அண்ணா அரசு மேனிலைப்பள்ளி
கும்பகோணம்.

*15 ஜூன் 2022*

சமர்ப்பணம்

அரசுப் பள்ளிச் சிறார் எழுத்தாளர்களுக்கு

நன்றி

மாண்புமிகு முதல்வர்,
மாண்புமிகு பள்ளிக்கல்வித் துறை அமைச்சர்,
தஞ்சாவூர் முதன்மைக் கல்வி அலுவலர்,
கும்பகோணம் மாவட்டக் கல்வி அலுவலர்,
தலைமையாசிரியர் மற்றும் ஆசிரியர்கள்
ஆகியோருக்கு
நன்றி.

# ஒரு வார்த்தை

இந்த முயற்சிக்கு முதல் காரணம், தமிழகப் பள்ளிக் கல்வித்துறையின் இளம் வாசகர் வட்டம் என்கிற செயல்பாடு. மாணவர்களின் வாசிப்பை பலப்படுத்த அரசு கொண்டுவந்த திட்டம்தான் இளம் வாசகர் வட்டம். நூலகத்தை மேம்படுத்தல், நூலகப் பாடவேளை ஒதுக்குதல், இளம் வாசகர் வட்டச் செயல்பாடுகள் வழி மாணவர்களின் படைப்பாற்றலை வளர்த்தல் என்று அதன் பணி நீண்டுகொண்டே போகிறது.

எங்கள் பள்ளி மாணவர்கள் பலர் வாசகர்களாக, கதை சொல்லிகளாக, எழுத்தாளர்களாக, ஓவியர்களாக மாற மாபெரும் வாய்ப்பைத் தந்ததுதான் இளம் வாசகர் வட்டம். ஏறக்குறைய ஐந்து மாதங்கள் நடந்த வாசித்தல், எழுதுதல் போட்டியில் அதிகபட்சம் இருநூறு மாணவர்களாவது கலந்துகொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். மிகச்சரியான படைப்புகளைத் தொகுக்கும்போது அவை ஒரு தொகுதியாக அமைந்தது எதிர்பாராத ஒன்று.

இக்கதைகளை ஒருசேர வாசிக்கும்போது படைப்புகள் யாவும் ஒரு முழுமையை நோக்கிய பயணம் என்றே தோன்றுகிறது. இக்கதைகளில் ஒரு வெகுளித்தன்மை வெளிப்படுவதை உணரமுடிகிறது. சிறிய குழந்தைகளின் படைப்புகளைத் தொகுத்து அவர்களிடம் காட்டும்போது, அவர்கள் முதிர்ந்த எழுத்தாளராகிவிடுகிறார்கள். இது எல்லா அரசுப் பள்ளிகளிலும் நடக்கவேண்டும். நடந்தால் அது மாபெரும் சாதனை.

*இங்கே எழுதியிருக்கும் குட்டி எழுத்தாளர்கள். படைப்பின் மணலில் அ என்ற எழுத்தை எழுதிப் பார்த்திருக்கிறார்கள். அவர்களின் விரலைப்பிடித்து உடன் எழுத உதவியிருக்கிறேன். படைப்பைச் சிறிதளவு செழுமைப்படுத்தியிருக்கிறேன்.*

*சிக்கா-சிக்-சிக்* எழுதிய ஜெயந்தி மனோகரன் அவர்களிடம் அலைபேசி காணொலி அழைப்பில் எங்கள் மாணவர்கள் பேசி மகிழ்ந்தனர். முக்கியமாக மாணவர்களின் குரலை அவர்கள் கேட்டது மட்டுமல்லாமல் தமிழ் மொழிபெயர்ப்புக் கதையை அவர் கேட்டது எங்களுக்குச் சந்தோஷம் தந்த தருணம்தான். ஏனெனில் இப்பிள்ளைகள் பொதுவாக ஏழைகள். ஏழையின் சிரிப்பில் இறைவன் இருப்பான் என்பது ஒரு கருத்து. இங்கு எழுத்தாக இருக்கிறான்.

*படைப்பின் வழியாகச் சிறுபிள்ளைகள் ஏதாவது பிழைகள் செய்திருந்தால் மன்னிக்கவும். மன்னிப்பீர்கள். ஏனெனில் வாசகர்கள் யாவரும் பெரியவர்கள்தானே!*

**ரா. தாமோதரன்**
தமிழாசிரியர்
இளம் வாசகர் வட்ட ஒருங்கிணைப்பாளர்

**நெ. ஷ்யாம் சுந்தர்**
பத்து - அ
இளம் வாசகர் வட்ட தலைவர்

**சா. ஹரிணி,**
ஒன்பது - அ
இளம் வாசகர் வட்டச் செயலர்

அறிஞர் அண்ணா அரசு மேனிலைப்பள்ளி
கும்பகோணம்

# பொருளடக்கம்

# சரியான பாடம்

க. அனுஷ்வேல்

*ஒரு காட்டில் ஒரு பச்சோந்தி வாழ்ந்து வந்தது. அது மிக சுயநலவாதி. அப்போது ஒரு ஓணான் பச்சோந்தியிடம் பேசத் தொடங்கியது.*

*“உன்னால் மட்டும் எப்படி நிறத்தை மாற்ற முடிகிறது.”*

*“அது ஒரு மந்திரம்.”*

*“அப்படியா, எனக்குச் சொல்லிக்கொடு.”*

*“சரி. ஆனால் உன் சாப்பாட்டில் எனக்குப் பாதி கொடுக்க வேண்டும்”.*

*“சரி சொல்”*

*”எனக்கு உருவம் மாறவேண்டும் என்று 108 முறை மாமரத்தைத் தினமும் சுற்றவேண்டும்”*

*“சரி” என்று சொல்லி பச்சோந்தி சொல்வதைச் செய்தது. இதற்கிடையில் ஓணான் நண்பான அணில் அங்கு வந்தது.*

*”நண்பா, உன்னைப் பச்சோந்தி ஏமாற்றிவிட்டது”*

*ஓணானுக்கு மகா கோபம். “இதை நான் பார்த்துக் கொள்கிறேன்.” என்றது அணில்.*

*மரத்திலிருந்த பச்சோந்தி முன் அணில் குதித்தது.*

“உன்னால் மட்டும் எப்படி அடிபடாமல் குதிக்கமுடிகிறது” என்று கேட்டது பச்சோந்தி.

“அது ஒரு மந்திரம். 1000 முறை மரத்திலிருந்து கீழே குதிக்கவேண்டும்.” என்றது அணில்.

உடனே பச்சோந்தி வேகமாகக் குதிக்கத் தொடங்கியது. விரைவில் அது அடிப்பட்டது.

பச்சோந்திக்குச் சரியான பாடம் கிடைத்தது என்று அணிலும் ஓணானும் சிரித்தன.

***

# வேம்பு சொன்ன நன்றி

அ. லெட்சுமணன்

*“கிருத்திகா சாப்பிட்டு முடிச்சு விளையாடப் போ!”*

*“சரி, நான் விளையாடிட்டு வர்ரேன். ப்ரண்ட்ஸ் வந்துட்டாங்க!“*

*“என்ன விளையாட்டு விளையாடலாம்?”*

*”இந்த மரத்துல ஏறி, யாரு ரொம்ப குச்சி உடைக்கிறாங்கன்னு பார்க்கலாம்”*

*“வேணாம் மரம் பாவம்.”*

0

*கிருத்திகா பள்ளி முடிந்து வீட்டுக்கு வந்தாள். வீட்டிற்குப் பின்புறம் பார்த்தாள். நாலைந்து பேர் நின்று கொண்டிருந்தார்கள்.*

*“என்ன பண்றாங்க அவங்க.”*

*“அப்பா இங்க வாங்க .. என்னாச்சு?”*

*“கார் ஷெட் கட்ட இடம் வேணுமே, அந்த வேப்ப மரத்த வெட்டினாத்தான் இடம் கிடைக்கும்.”*

*“அப்பா, அந்த மரத்துல பறவைகள் தங்குமே. அதுங்க எங்கே போகும். அந்த மரத்த வெட்டினா அதுக்கு வலிக்கும்பா. வெட்டாதீங்க அப்பா”*

*“சரி மரத்த வெட்டல.”*

*கிருத்திகா மகிழ்ந்தாள். வேப்ப மரம் காற்றில் அசைந்து நன்றி சொன்னது.*

***

# தேனீ மற்றும் ஈ

ஆ. லெட்சுமணன்

*ஒரு காட்டில் ஒரு காட்டுத் தேனீயும் ஈயும் நண்பர்களாக இருந்தனர். ஒரு நாள் ஈ தேனீயைப் பார்த்துக் கேட்டது.*

*“நீ தேனைச் சேர்த்து வைப்பாய். இந்த மனிதர்கள் வந்து அதை எடுத்துத் திருடிக்கொண்டு போய் விடுகிறார்களே!”*

*“அவர்கள் தேனைத்தான் திருடமுடியும். என் உழைப்பைத் திருட முடியாது” என்று சொல்லியபடி தேனீ ஒரு பூவை நோக்கிப் பறந்தது.*

*ஈ அதைப்பார்த்தபடி இருந்தது.*

***

# யானையும் வேட்டைக்காரனும்

பா. கிஷோர்

*காட்டியில் யானை ஒன்று வசித்துவந்தது. யானை ஒரு குளத்தில் தினமும் நீர் அருந்த வரும். இதைப்பார்த்த வேட்டைக்காரன் அதை வேட்டையாடப் பார்த்தான். அதற்காக ஒரு பெரிய குழியைத் தோண்டி அதன்மேல் இலை தழைகளை வைத்து மூடினான். யானை விழுந்துவிடுமா என்ற தெரிந்துகொள்வதற்காக அதன்மீது எகிறி குதித்தான். அவன் அக்குழியில் விழுந்துவிட்டான். அவனால் குழியிலிருந்து மேலே ஏறு முடியவில்லை. யானை வந்தது. தன் தும்பிக்கையை நீட்டியது.*

***

# பூனையும் நானும்

ஜே. ஹேமா

என் பெயர் ஹேமா. நான் ஒரு சிறுமி. நான் ஒரு பூனை வளர்த்தேன். அது ஒரு பெண் பூனை. அதன் பெயர் ரோஸி. அது என்னிடம் மிகவும் அன்பாக இருக்கும். அதன் நிறம் சிறுத்தையின் நிறத்தில் இருக்கும். அந்த சிறிய பூனை தன் தோழியுடன் விளையாடிக்கொண்டிருக்கும்போது, எதிர்பாராமல் ஒரு பேருந்து மோதி இறந்துவிட்டது. ரோஸி இறந்துவிட்டது. ரோஸியின் ஞாபகமாக மற்றொரு பூனையை நான் வளர்க்கத் தொடங்கிவிட்டேன். அதன்பெயர் ராஜி. இது கருப்பு, வெள்ளை நிறத்தில் இருக்கும். ராஜி என்னிடம் ரோஸியைப்போல் அன்பாக இருக்கிறது.

***

# மீன், பாம்பு, கொக்கு

கோ. ஸ்ரீதுர்க்காதேவி

*ஓர் ஆற்றில் மீன் தன் குட்டிகளுடன் சந்தோஷமாக வாழ்ந்து வந்தது. அதே ஆற்றங்கரையில் பாம்பும் தன் குட்டிகளுடன் வாழ்ந்து வந்தது. அந்தப் பாம்பு, மீன் குஞ்சுகளை ஒவ்வொன்றாகச் சாப்பிடத் தொடங்கியது. அந்த மீன் மிகவும் வருத்தமடைந்தது. ஒரு நாள் அந்தப் பாம்பு வெளியே சென்றது. அது தெரியாமல் பாம்புக் குட்டிகள் வெளியே வந்தன. ஒரு கொக்கு பசியுடன் இருந்தது. பாம்புக் குஞ்சுகளைக் கொத்தித் தின்றுகொண்டிருந்தது. திடீரென அந்தப் பாம்பு வந்தது. கொக்கு பறந்து விட்டது. அந்தப் பாம்பு மிகவும் வருத்தமடைந்தது.*

***

# அடிமைக் குதிரை

டி. கே. விஷ்ணு

*ஒரு குதிரைக்கும் கலைமானுக்கும் இடையில் சிறு சண்டை. அக்கலைமானை ஒழித்துக்கட்ட நினைத்த குதிரை, ஒரு மனிதனின் உதவியை நாடியது.*

*அதன் வேண்டுகோளை ஏற்ற மனிதன் குதிரைக்குச் சேணமும் கடிவாளமும் போட்டான். அதன் மீது சவாரி செய்து கலைமானை விரட்டிப் பிடித்துக் கூண்டில் அடைத்தான்.*

*தனது பகைவன் மாட்டிக்கொண்டதை நினைத்து மகிழ்ந்த குதிரை மகிழ்ச்சியில் கனைத்தது. தன் எதிரியை அடக்கிய மனிதனுக்கு நன்றி கூறியது.*

*தன் கடிவாளத்தை நீக்கித் தன்னை விடுவிக்கும்படி வேண்டியது.*

*"குதிரையே! உன்னை விடுவிப்பதா! அது முடியவே முடியாது!. நான் வசதியாகச் சவாரி செய்ய நீ எனக்கு மிகவும் பயன்படுவாய். உன்னை விடவே மாட்டேன்" என்று சிரித்தான் குதிரைக்காரன்.*

*அன்று முதல் குதிரை மனிதனுக்கு அடிமையானது.*

***

# ஆசையை நிறைவேற்றும் கிணறு

செ. அனுஷா

*ஒரு ஊரில் ஆசையை நிறைவேற்றும் கிணறு ஒன்று இருந்தது. அந்தக் கிணற்றில் காசு போட்டால் யார் போட்டார்களோ அவர்களின் ஆசையை நிறைவேற்றும். பல வருடம் போனது. இப்படி ஆசையை நிறைவேற்றும் கிணறுக்கு வயதானது. அதனால் அதற்குச் சக்தி குறைந்து இல்லாமல் போய்விட்டது. கிணறு அழுதது. அப்போது ஒரு தேவதை வந்தது.*

*''ஏன் அழுகிறாய்?''*

*''எனக்குச் சக்தி போய்விட்டது''*

*''கவலைப் படாதே. ஆசையை நிறைவேற்றும் மலையையும் ஆமையையும் எனக்குத் தெரியும். அவற்றைப் பார்த்துக் கேட்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு ஆமையையும் மலையையும் பார்த்துக் கேட்கப் போனது தேவதை.*

மலையிடமும் ஆமையிடமும் நடந்த விஷயத்தைச் சொன்னது தேவதை. மலை அமைதியாக யோசனை சொன்னது. ஆனால் ஆமை மட்டும், " தேவதையே! அதோ அந்தக் குளத்தில் இருக்கும் நீரை எடுத்துக்கொண்டு போய், கிணற்றில் ஊற்று" என்றது. அதன்படி குளத்துத் தண்ணீரைக் கிணற்றில் ஊற்றியது.

வழக்கம்போல் கிணறுக்கு ஆசையை நிறைவேற்றும் சக்தி வந்துவிட்டது.

***

# வயதான தாத்தா

பா. விஜய்

*ராமுவும் அவன் தாத்தா சுப்புவும் காட்டுவழியில் நடந்துகொண்டிருந்தனர். திடீரென்று தாத்தாவைப்பார்த்து பேய்பேய் என்று பயமுறுத்தினான். தாத்தா மயங்கி விழுந்தார். அந்த வழியாக வந்த மூன்று பேர் தாத்தாவின் முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். தாத்தா எழுந்தவிட்டார். பேரன் ராமு அழுதான். அவர்கள் அனைவரும் பயப்படாதே என்று சொல்லி சிரித்தார்கள்.*

***

# கிராமத்திற்குப் போவோமா!

சா. ஹரிணி

*அனு என்பவள் நகரத்தில் வாழும் ஆறாம் வகுப்பு மாணவி. ஒரு நாள் அனுவின் வகுப்பில் தமிழ் வகுப்பு நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது தமிழ் ஆசிரியர் நாளை வரும்பொழுது நமது புத்தகத்தில் உள்ள சந்தை என்கிற பாடத்தைப் பற்றித் தெரிந்துகொண்டு வாருங்கள் என்றார். அனு இதுவரை கிராமச் சந்தைக்குப் போனது கிடையாது. அவள் அம்மாவிடம் கேட்டாள்.*

*''சந்தை என்றால் அங்கு அனைத்துப் பொருட்களும் இருக்கும். காய்கறி, மளிகை, இறைச்சி, தின்பண்டங்கள், மிட்டாய்கள், ரங்கராட்டினம், பீப்பி என்று அனைத்தும் விற்பனை செய்வார்கள்'' என்று சொன்னார். அனுவிற்கு இப்பொழுது சந்தையைப் பற்றிச் சிறிது தெரியவந்தது. தமிழாசிரியர் வகுப்புக்கு வந்தார். கிராமச் சந்தையில் கிடைக்காதே பொருள்கள் இல்லை. கடுகு, சீரகத்தில் இருந்து உணவுத் தானியங்கள், காய்கறிகள்,*

*கோழி, ஆடு, மாடு, குதிரைன்னு கால்நடைகள், சோப்பு சீப்பு கண்ணாடி வளையல்கள் போன்ற அலங்காரப் பொருள்கள், இரும்புப் பாத்திரங்கள், துணிமணிகள்னு ஒரு குடும்பத்துக்கு தொழிலுக்குத் தேவையான எல்லாவற்றையும் வாங்கலாம். அது மட்டுமல்லாமல் பல பேருக்கு வேலை வாய்ப்பையும் வருமானத்தையும் கொடுத்தது என்று விளக்கினார் ஆசிரியர். நாங்கள் சிறுவயதில் ஏரி, குளம், குட்டை என்று விளையாடினோம். உங்களுக்கு அந்த வாய்ப்பில்லை என்றார்.*

*அனு வீட்டிற்குள் வந்தாள். அதையெல்லாம் யோசித்துப் பார்த்தாள். வாரச் சந்தைக்குள் சென்று மிட்டாய் வாங்கித் தின்று, குளத்தில் குதித்து விளையாடிப் பின்பு, குதிரையின் வாலைத் தடவினாள். அவள் அம்மா உள்ளே வந்தாள்.*

*"என்ன பண்ற?"*

*"சந்தையில் இருக்கேன்மா"*

***

# என் கனவு கதை

வெ. சந்தியா

*நான் ஒரு பறவையைப் போல் பறந்துகொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு மரத்தில் அழகிய குயில் ஒன்று சோகமாக அமர்ந்திருந்தது. நான் அந்த மரத்தின் அருகே சென்றேன்.*

*“ஏ! குயிலே! குயிலே! ஏன் சோகமாக இருக்கிறாய்?”*

*“என்கூட விளையாட யாரும் இல்லை”*

*“நீ ஏன் கலைப்படுகிறாய். நானும் நீயும் விளையாடுவோம் வா”*

*குயிலுடன் நானும் பறந்தேன்.*

*“இப்போ எப்படி இருக்கிறது?”*

*“நல்லா இருக்கிறது.”*

*சரி. நான் தூங்கப் போகிறேன். கனவு போதும். எப்பொழுது நீ என்னைக் கூப்பிடுகிறாயோ அப்போ வருவேன். என்ன?”*

*நான் தூங்கி எழுந்தேன். என் ஜன்னல் ஓரத்தில் நிஜமாகவே ஒரு குயில் அமர்ந்திருந்தது.*

*“வா! விளையாடலாம்!” என்ற குரல் எனக்குக் கேட்டது.*

***

# புத்தகமும் கைபேசியும்

ஐ. விஷ்ணுப்பரியா

*“இல்லை. நான் தான் நல்லவன்”*

*“இல்லை. நான்தான் நல்லவன்”*

*என்று புத்தகமும் கைபேசியும் சண்டையிட்டுக்கொண்டிருந்தன. இரண்டுக்கும் யார் நல்லவன் என்று பிரச்சினை.*

*“உன்னைப் படித்துப் புரிந்துகொள்ள நேரம் ஆகும். ஆனால் என்னைத் தொட்ட கணத்தில் எல்லாவற்றையும் தந்துவிடுவேன்” என்றது கைப்பேசி.*

*“ஆனால் உன்னிடம் கெட்ட விஷயங்கள் உள்ளன. பார்ப்பவர்கள் அதையும் பார்த்துக் கெட்டுப் போகிறார்கள்.”*

*“இருக்கலாம். அது அவரவர் கையில் இருக்கிறது.”*

*“நீ சொல்வது சரிதான் புத்தகமே. என்னிடம் நன்மைகளும் தீமைகளும் உள்ளன. ஆனால் என்னிடம் உள்ள தீமைகளை மட்டுமே ஒருவர் தேடி வந்தால் என்ன செய்வது?”*

*“உண்மைதான் நான் இருவரும் நல்லவர்கள்தான். நம்மை நல்வழியில் பயன்படுத்துபவர்கள் நல்லவர்கள். நம்மைத் தீய வழியில் பயன்படுத்துவர்கள் தீயவர்கள்.”*

*புத்தகமும் கைபேசியும் இப்போது சண்டையிடுவதில்லை.*

***

# ஒரு குட்டிக் கதை

எஸ். ஜெயஸ்ரீ

*ஒரு வாலிபன் ஜன்னல் வழியே பார்த்துக் கத்தினான். அவனுக்கு வயது இருபது இருக்கும்.*

*"அப்பா இங்கே பாருங்க.. மரங்கள் நம் பின்னால் ஓடுகின்றன"*

*அவன் அப்பா சிரித்தார்.*

*"அப்பா மேலே பாருங்க. நம் தலைக்குமேல் மேகங்கள் ஓடுகின்றன"*

*அவன் அப்பா சிரித்தார்.*

*அருகில் இருந்தவர்கள் அவனைப் பைத்தியம் என்று நினைத்து அவன் அப்பாவிடம் சொன்னார்கள். "உங்கள் பிள்ளைக்கு என்ன பைத்தியமா? போய் டாக்டரிடம் காட்டுங்கள்"*

*அப்பா சிரித்தார்.*

*“நாங்கள் டாக்டரிடமிருந்துதான் வருகிறோம்”*

*“என்ன?”*

*“நாங்கள் கண் டாக்டரிடமிருந்து வருகிறோம்.. சிறிய வயதில் என் மகனுக்கு கண்ணில் அடிப்பட்டது. இப்போதுதான் கண் சிகிச்சையால் அவனுக்குப் பார்வை கிடைத்திருக்கிறது”*

*.“அப்பா, அங்கே பாருங்கள் ஆறு ஓடுகிறது”*

*எல்லாரும் மகிழ்ச்சியால் சிரிக்கத் தொடங்கினர்.*

***

# உழைக்க விரும்பிய ஓநாய் கதை

மு. கார்த்திகேயன்

காட்டில் இரைதேடிக் களைத்துப் போனது ஓநாய். இனி காட்டில் இரையைத் தேடி அலைவதைவிட நாட்டில் போய் கிடைப்பதைச் சாப்பிட்டு வாழலாம் என்று முடிவுக்கு வந்து காட்டைவிட்டு வந்த ஓநாய்க்கு முதலில் கண்ணில்பட்டது வயலில் உழுதுகொண்டிருந்த உழவன். கலப்பையில் பூட்டிய மாட்டை அவிழ்த்து மரத்து நிழலில் கட்டிவிட்டு, வீட்டிலிருந்து கொண்டுவந்த பழைய சோற்றையும் எலுமிச்சை ஊறுகாவையும் சுவைத்துச் சாப்பிட ஆரம்பித்தான்.

ஓநாய் மெதுவாக அவனிடம் சென்றது.

''எனக்குப் பசிக்கிறது. சாப்பிட ஏதாவது கொடேன்''

''உனக்கு இந்தச் சாப்பாடு பிடிக்காது.''

''பரவாயில்லை. சாப்பிடக் கொடு'' என்றது.

*“இப்போ சாப்பாடு தருகிறேன். அடுத்த முறை நீ உழைத்தால் தான் சாப்பாடு போடுவேன். என்ன?”*

*“என்ன வேலை?”*

*“ஆட்டுக் கொட்டைகையில் ஆட்டுக்குட்டிகள் இருக்கின்றன. நீ அவற்றைப் பார்த்துக்கொள். திருடித் தின்றாயோ, உன்னை நான் கொன்றுவிடுவேன்”*

*“சரி“*

*அதுமுதல் காட்டில் வஞ்சகமான ஓநாய், நாட்டில் ஒழுக்கமாக வாழ்ந்து, உழைப்பால் வாழ்ந்தது.*

***

# அம்மா, அக்கா, தங்கை, நாய்

பா. தமிழ்மணி

ஒரு ஊரில் ஒரு அம்மா, அக்கா, தங்கை, நாய் இருந்தார்கள். அந்த நாய் நல்ல நாய். விசுவாசமாக இருக்கும். அம்மாவுக்கும் அக்காவுக்கும் நாயைப் பிடிக்கும். தங்கைக்குப் பிடிக்காது. நாயைக் குளிப்பாட்டுவது, சோறு போடுவது என்று அம்மாவும் அக்காவும் செய்வார்கள். தங்கை நாயைக் கண்டாலே அடிப்பாள். துரத்துவாள்.

அக்காவுக்கும் தங்கைக்கும் திருமணம் நடந்தது. நாயுடன் அம்மா தங்கை வீட்டிற்கு வாழச் சென்றாள். "நாயில்லாமல் வா" என்றாள் தங்கை. அக்காவோ, அம்மாவையும் நாயையும் சேர்த்துக்கொண்டாள்.

நாய்க்கு வயதாகவிட்டது. அது அம்மாவையும் அக்காவையும் தங்கையையும் பார்த்துச் சொன்னது.:" எனக்கு வயதாகிவிட்டது. கடைசி காலம் வந்துவிட்டது. நான் செத்தபிறகு, உங்கள் வீட்டிற்குப் பின் ஒரு பள்ளம் தோண்டி, ஒரு பெட்டியில் வைத்து இருபத்தெட்டு நாளைக்குச் சாமி கும்பிடுங்கள். பிறகு திறந்து பாருங்கள்" என்றது.

நாயும் இறந்தது. நாய் சொன்னபடியே, ஒரு பெட்டியில் நாயை வைத்து, வீட்டின் பின்புறம் பள்ளம் தோண்டிப் புதைத்தார்கள். தினமும் அம்மாவும் அக்காவும் சாமி கும்பிட்டார்கள். தங்கை கும்பிடவே இல்லை. நாய் சொன்ன நாளில் பெட்டியைத் திறந்து பார்த்தார்கள். பெட்டிக்குள் வைரம், தங்கம், வெள்ளி என விலைமதிப்பற்ற பொருள்கள் இருந்தன. அம்மாவும் அக்காவும் ஓவென்று அழுதார்கள்.

இதைப் பற்றிக் கேள்விப்பட்ட தங்கை உடனே வந்தாள். " பெட்டி எங்கே?" என்றாள். "வீட்டின் பின்னால் இருக்கிறது." என்றார்கள். வீட்டின் பின்புறம் சென்ற தங்கை, மூடி இருந்த பெட்டியைத் திறந்த பார்த்தாள்.

பெட்டிக்குள் வெறும் புழுவும் பூச்சியுமாக இருந்தது. ஒரே துர்நாற்றம். உடனே அம்மாவிடமும் அக்காவிடமும் சண்டை போட்டாள். பாதியைத் தந்துவிடவேண்டும் என்றாள். அவர்கள் பாதியைக் கொடுத்துவிட்டார்கள்.

வீட்டிற்கு வந்த தங்கை, சண்டை போட்டு வாங்கிவந்த நகைப்பையைத் திறந்து பார்த்தாள். அதில் கல்லும் மண்ணும்தான் இருந்தது.

***

# எலியும் தோட்டக்காரரும்

ரா. நிஷா

*ஒரு கிராமத்தில் தோட்டக்காரன் அவன் மனைவியுடன் வாழ்ந்துவந்தாள். எலி ஒன்று ஒருநாள் தோட்டக்காரன் குடிசைக்கு வந்தது.*

*“தோட்டக்காரரே! உங்கள் வயலில் தங்கிக்கொள்ளலாமா?”*

*“முடியாது. நீ வயலை நாசமாக்கிவிடுவாய். வெளியே போ. இல்லை என்றால் கொன்றுவிடுவேன்” என்றது.*

*“சரி” என்று சொன்ன எலி, யாருக்கும் தெரியாமல், குடிசையின்பின்னால் இருந்த பொந்தில் ஒளிந்துகொண்டது. தோட்டக்காரன் வெளியே போன பிறகு வெளியே வந்து தோட்டக்காரியிடம் பேசியது.*

*“ஏ! நீ இன்னும் போகலயா?“*

*“இல்லை. உனக்கு என்ன வேண்டும் என்று சொல்.”*

*“ஒரு ரோஜா செடி வேண்டும். இந்தக் கிராமத்தில் எங்கும் இல்லை. பார்ப்போம்” என்று சவால் விட்டாள் தோட்டக்காரி.*

*இரண்டு நாள் கழித்து வாசலில் ரோஜா செடி இருந்தது. அதை நட்டு வைத்தாள் தோட்டக்காரி. எலிக்கு நன்றி சொன்னாள்.*

*“எலியே! மல்லிச் செடி வேண்டும்” என்றாள்.*

*இரண்டு கழித்து, ஒரு மல்லிச் செடி அவள் வாசலில் இருந்தது.*

இது ஏது என்று தோட்டக்காரன் கேட்டான். தோட்டக்காரி நடந்ததைச் சொன்னாள். உடனே தோட்டக்காரன் எலியைக் கூப்பிட்டு, "எலியே! எனக்கு முல்லைச் செடி வேண்டும். கொண்டு வந்து தருவாயா" என்று சொன்னான். ஏனெனில் சுற்றுவட்டாரத்தில் முல்லைச்செடியே இல்லை என்று தோட்டக்காரனுக்குத் தெரியும். எலியும், "இதோ வருகிறேன்" என்ற சொல்லிப் போனது.

இரண்டு நாள் ஆனது. இரண்டு வாரம் ஆனது. இரண்டு மாதம் ஆனது. "இனி எலியின் கதை அவ்வளவுதான்" என்று தோட்டக்காரன் சொன்னான்.

அடுத்தநாள் வாசலில் முல்லைக்கொடி வேருடன் இருந்தது. தோட்டக்காரி சந்தோஷத்தில் குதித்தாள். தோட்டக்காரன், "எலியே! உள்ளே வா" " என்றான். அதுமுதல் எலி தோட்டக் காரன் வீட்டில் வாழத் தொடங்கிவிட்டது.

***

# ஒரு கனவு

ரா. கிஷ்லர்

*ஒரு நாள் மாலையில் நான் கடற்கரையில் படுத்திருந்தேன். நீண்ட களைப்பால் தூங்கினேன். அப்போது ஒரு கனவு வந்தது. நடுக்கடலில் ஒரு தீவு. அதில் பெரிய அரண்மனை. அந்த அரண்மனை வாசலில் சிங்காரத் தோட்டம். அதில் ஒரு நீரோடை. அந்த நீரோடைக்கு அருகில் ஒரு பெண் சிலை. அப்படி என்று நினைக்கும்போது, அது அரண்மனைக்குள் ஓடிவிட்டது. நான் பின்தொடர்ந்தேன். வழியில் ஒரு பாம்பு படுத்துக்கிடந்தது. என்னைப் பார்த்ததும் தலையைத் தூக்கிப் படம் எடுத்து என்னை விரட்டியது. நான் பயந்து ஓடினேன். அரண்மனையை , பூங்காவை , நீரோடையைத் தாண்டி கடற்கரைக்கு வந்துவிட்டேன். அப்போ தும் பாம்பு துரத்தியது. மீண்டும் மூச்சிறைக்க ஓடினேன். ஓடிக்கொண்டே இருந்தேன். பாம்பு பெரிய படம் எடுத்து என்னை விழுங்கப் பார்த்தது. நான் கடலுக்குள் பாய்ந்தே ன். திடீரென்று புயல் வீசியது. நான் தூக்கி அடிக்கப்பட்டேன். திரும்ப அரண்மனை வாசலில் விழுந்தேன்.*

திரும்ப உள்ளுக்குள் போனேன். அதே சிங்காரத் தோட்டம். அதே பெண் சிலை. என்னைப் பார்த்தவுடன் மீண்டும் உள்ளே ஓடினாள். திரும்பப் பின்னால் போனேன். நடுவில் அதே பாம்பு என்னைப் பார்த்துப் படம் எடுக்கத்தொடங்கியது. நான் கண்விழித்தேன். எவ்வளவு மோசமான கனவு. திரும்ப கடலிலிருந்து அரண்மனைக்குத் திரும்பினேன். கனவில் நடப்பதுபோல் நடக்குமா என்று பயத்தில், அரண்மனைக்குச் சென்றேன். சி ங்காரத் தோட்டத்தைக் கடந்து, உள்ளே போனேன். அந்தச் சிலை இருந்தது. நான் அதைப் பார்த்தே ன். அது உயிருள்ள பெண்ணாக மாறவில்லை.

நல்லவேளை பாம்பும் இல்லை.

***

# எல்லா உயிரினமும் ஒன்றே

ஜென்சியா ஜாஸ்மின்

*ஒரு ஊரில் கவின் மற்றும் ராகுல் என இரண்டு நண்பர்கள் வசித்து வந்தனர். எப்போதும் ஒற்றுமையாகவும் ஒன்றாகவும் விளையாடுவார்கள். ஒருவருக்கொருவர் அன்பாக இருப்பார்கள். சண்டை போடாமல் விட்டுக்கொடுத்து செல்லுவார்கள். ஒரு நாள் மாலைப் பொழுதில் கவின் மற்றும் ராகுல் பந்து விளையாடினார்கள். விளையாடிக் கொண்டே இருக்கும்போது பூப்பந்து மரத்தின் மேல் விழுந்தது. அது கிளையில் மாட்டிக்கொண்டது. உடனே கவின்,*

*"ராகுல், நான் போய் அதை எடுத்து வருகிறேன்" என்று மரத்தின் மேல் ஏறினான்.*

*"மெதுவாக பார்த்து கீழே விழாமல்".*

*"சரி" என்று சொல்லிக்கொண்டே கவின், மெதுவாக மரத்தின் மீது ஏறி அமர்ந்தான். பூப்பந்து*

குருவிக் கூட்டில் இருந்ததைப் பார்த்த கவின், பூப்பந்து எடுத்தான்.

"இந்தக் கூட்டில் குருவி முட்டைகள் இருக்கின்றன" என்று ராகுலிடம் சொன்னான்.

"நாம் ஆளுக்கொன்றாக எடுத்துக் கொள்ளலாம்"

உடனே ராகுல், "வேண்டாம் அதை எடுக்காதே! அந்த முட்டையும் ஒரு உயிர்தானே! அதை நாம் சாப்பிட்டு விட்டால் முட்டையின் அம்மா குருவி மிகவும் வருத்தப்படுவாள். அம்மா குருவி இரை தேடுவதற்காகச் சென்றிருக்கும். நீ எப்படி உன் அம்மாவை விட்டுப் பிரியாமல் இருக்கிறாயோ, அதேபோலதான் குருவியும் இருக்க வேண்டும். உன்னை யாராவது கடத்திச் சென்றால் நம் அம்மா மனம் எப்படி புண்படும். அதேபோல குருவியின் தாய் மனமும் புண்படும் தவிக்கும்." என்று சொன்னான்.

இதைப் புரிந்து கொண்ட கவின் முட்டையை எடுக்காமல் கீழே இறங்கி வந்தான்.

***

# பயணம்

சா. ஹரிணி

*என் பெயர் முத்துசாமி. நான் எங்கள் ஊர் பக்கத்தில் இருக்கும் காட்டிற்குச் சென்றேன். நான் போகும் பாதையில் ஒரு நரி நின்றுகொண்டிருந்தது. நான் பயந்துவிட்டேன். பக்கத்தில் இருந்த கம்பை எடுத்து அந்நரியை அடித்தேன். அது ஓடிவிட்டது. ஆனால் பயம் போகவில்லை. நான் நடந்து சென்றுகொண்டே இருந்தேன். அப்பொழுது ஒரு சத்தம். உர்..உர்......என்று உறுமிக்கொண்டே ஒரு காட்டுப் பன்றிக் கூட்டம் ஓடி வந்தது. ஒரு புலி அந்தக் கூட்டத்தில் உள்ள ஒரு பன்றியை அடித்துத் தின்றது. அதைப் பார்த்த உடன் பயம் அதிகமாகி, ''ஐயோ!'' என்று சத்தமிட்டேன். அந்தச் சத்தத்தில் புலி திரும்பி என்னைப் பார்த்துத் துரத்திக் கொண்டே வந்தது.*

*''யாராவது காப்பாற்றுங்கள்..யாராவது காப்பாற்றுங்கள்'' என்று என்று கத்திக்கொண்டே ஒரு குகைக்குள் சென்றேன். அந்தக் குகைக்கு அந்தப் பக்கம் ஒரு வழி இருந்தது. அது வழியாக வெளியே சென்றேன். ஆனால் அந்த வழியில் செல்ல முடியவில்லை. வழியில் முதலைகள் நிறைந்த ஆறு ஒன்று இருந்தது. அதற்குள் இறங்கினால் அவ்வளவுதான். அந்த ஆற்றின்மேல் ஒரு மரம் முறிந்து விழுந்துகிடந்தது. அதன் மேல் ஏறிச்சென்றேன். அந்தப் பக்கம் ஒரு சிங்கக் கூட்டம் இருந்தது. அதில் உள்ள ஆண்சிங்கம் ஒரு சோம்பேறி. பெண்சிங்கம்*

மிகவும் சுறுசுறுப்பானது. பெண்சிங்கம் ஆண் சிங்கத்தின்மேல் மிக மிகக் கோபத்துடன் இருந்தது. இரண்ட சிங்கமும் பேசிக்கொண்டிருந்ததை நான் கேட்டேன்.

பெண் சிங்கம் ஆண்சிங்கத்தைப் பார்த்து, "நான்தானே எப்பொழுதும் மான், முயல், வரிக்குதிரை என அனைத்தையும் அடித்து உணவு கொண்டு வருகிறேன். ஆனால் நீயோ, நம் குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டு, நான் எடுத்து வரும் உணவுகளைச் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறாய். இனி ஒரு வாரத்திற்கு நீயே உனக்கும் உன் பிள்ளைகளுக்கும் உணவைத் தேடி எடுத்துவந்து கொள். நான் ஓய்வு எடுக்கப்போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் பெண்சிங்கம் குகைக்குள் சென்று படுத்துக்கொண்டது.

ஆண்சிங்கமோ பெண்சிங்கம் சொன்னதுபோல உணவைத் தேடிச் சென்றது. சிங்கம்போன பின்பு நானும் அந்த வழியிலேயே என் வீட்டுக்கு வந்துவிட்டேன்.

***

# மயிலின் குரல்

க. அனுஷ்வேல்

*ஒரு காட்டில் ஒரு மயில் இருந்தது. ஆனால் அந்த மயிலின் குரலைப் பார்த்துக் கேலியும் கிண்டலுமாக காட்டில் இருக்கும் விலங்குகள் சிரித்தன. மயிலுக்கு அவற்றைப் பார்த்தாலே மிகவும் கோபம் வரும். மயிலுக்கு அவற்றை அடிக்கும் அளவுக்குச் சக்தி கிடையாது. அதனால் மயில் ஒரு முடிவு எடுத்தது. காட்டை விட்டுச் சென்றுவிடலாம் என்று எண்ணியது. காட்டை விட்டுப் போகும் வழியில் ஒரு வயசான குரங்கு ஒன்று இருந்தது.*

*“ஹே! மயிலே! ஏன் சோகமாக இருக்கிறாய்?” என்று கேட்டது.*

*“என் குரல் அசிங்கமாக இருக்கிறது. காட்டை விட்டுப் போகிறேன்” என்றது மயில்.*

*“ஏ! முட்டாள் மயிலே ! உன் தோகையை விரித்துப் பார். நீ எவ்வளவு அழகுன்னு உனக்குத் தெரியும்”*

*உடனே தோகையை விரித்துப் பார்த்தது மயில். அதைப் பார்த்ததும் சந்தோஷப்பட்டுக் காட்டுக்குச் சென்று தைரியமாக வாழத் தொடங்கியது.*

***

# யுவான்

நெ. ஷ்யாம் சுந்தர்

*முன்னொரு காலத்தில் அழகான தீவு ஒன்றிருந்தது. அந்தத் தீவில் ஒரு வாலிபன் இருந்தான். அவன் பெயர் யுவான். யுவானுடைய அம்மாவிற்கும் அப்பாவிற்கும் ரொம்ப காலமாகக் குழந்தை இல்லாமல் இருந்து பல வருடங்களுக்குப் பிறகு யுவான் பிறந்தான். இதனால் யுவான் வாலிபனாகும்போது அவன் பெற்றோர்களுக்கு வயதாகிவிட்டது. அவன் தந்தையும் தாயும் நோய்ப்படுக்கையில் விழுந்தார்கள். பள்ளிப்படிப்பை முடிப்பதற்கு முன்பே குடும்பச் சுமையை ஏற்றுத் தனது தந்தை வேலை செய்துவந்த கடைக்கு வேலைக்குப் போய்ச் சேருகிறான் யுவான். அது ஒரு மரக்கடை. அவன் அப்பாவுக்குத் தச்சு வேலை தெரியும். ஆனால் யுவானுக்கோ எந்த வேலையும் தெரியாது. அவன் அங்கு எடுபிடியாக வேலை செய்து சிறிது சிறிதாக அந்த வேலையைக் கற்றுக்கொண்டான். எடுபிடியாக வேலை செய்வதால் அவனது சம்பளம் மிகக் குறைவு. அதை வைத்து அவனால் தனது பெற்றோரின் மருத்துவச் செலவைக்கூடச் சமாளிக்கமுடியவில்லை. ஆனால் அவன் மனம் சோர்வடையாமல் இந்த வேலையை வைத்து வாழ்க்கையில் முன்னேறவேண்டும் என்ற லட்சியத்தோடு யுவான் வாழ்கிறான்.*

அப்போது அந்தத் தீவை ஆண்ட மன்னர் ஒரு போட்டியை அறிவித்தார். ''ஒரு பாத்திரத்தைச் செய்யவேண்டும். ஆனால் அது நாம் வாழும் இந்தப் பூமியை மாசுபடுத்தக்கூடாது. இயற்கையை அழிக்கக்கூடாது. மறுசுழற்சி செய்து பயன்படுத்துமாறு அப்பொருள் இருக்கவேண்டும்'' என்ற விதியை விதித்தார். இயற்கையைப் பாதுகாக்கும் நோக்கம் தனக்கு மட்டும் அல்லாமல் தனது தீவு மக்களுக்கும் இருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் இப்போட்டியை அறிவித்தார் மன்னர்.

''அப்படிச் செய்யும் பாத்திரத்தை வாரம் ஒருவர் வீதம் அரசவையில் மன்னர்முன் வைக்கவேண்டும். அதை மன்னர் பார்வையிடுவார் என்றும் அந்தப் போட்டியில் வெற்றி பெறுவோருக்கு அந்த அரண்மனைக்குத் தேவைப்படும் அனைத்துப் பாத்திரங்கள் செய்யும் நிரந்தரப் பணியையும் பொற்காசுகளையும் அளிப்ப''தாக அமைச்சர் மூலம் அறிவித்தார் மன்னர்.

மன்னர் அறிவிப்பைக் கேட்ட பலரும் கற்களாலும் கண்ணாடிகளாலும் பாறைகளாலும் விதவிதமான பாத்திரங்களைச் செய்து வந்தனர். இதனை வாரம் ஒருவர் வீதம் மன்னர் பார்வையிட்டார். இவை எதுவுமே மன்னரைத் திருப்திபடுத்தவில்லை. மன்னர் அனைத்தையும் நிராகரித்தார். மன்னர் அறிவிப்பை அறிந்த யுவான் தனது முதலாளியிடம் மரக்கடையில் வீணாகும் மரத்துண்டுகளைத் தருமாறு கேட்டான். அதற்கு அந்த முதலாளி, ''நான் செய்த பாத்திரத்தையே மன்னர் நிராகரித்து விட்டார். நீ என்ன செய்யப் போகிறாய்?'' என்று கூறினார்.

யுவான் மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டே இருந்ததால், ''கடையின் பின்புறம் வீணாகும் மரத்துண்டுகள் கிடக்கின்றன. அதில் உனக்கு எது வேண்டுமோ, அதை எடுத்துக்கொள்'' என்றார் முதலாளி. அவன் அங்கு சென்று பார்த்தான். மரத்துண்டுகள் எல்லாம் சின்னஞ்சிறியதாக இருந்தன. நீண்டநேரம் தேடியபிறகு தனக்குத் தேவையான மரத்துண்டுகளைக் கண்டுபிடித்து எடுத்துக்கொண்டான் யுவான். அவை சிறியதாக இருந்ததால்

*அவற்றை வைத்து அவனால் நான்கு தேநீர் கோப்பைகளையும், ஒரு தேநீர் குவளையையும் மட்டுமே செய்ய முடிந்தது.*

*அந்த வாரமோ அவன் வாரம். அவன் செய்த பாத்திரங்களை, அரசவையில் மன்னர் முன் வைத்தான். அரசவையில் இருந்த மற்ற மந்திரிகளும் யுவானின் படைப்பையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பாத்திரங்களைப் பார்த்ததும் வியப்படைந்த மன்னர், அவற்றையே வெகுநேரம் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பிடித்துப்போய்விட்டது. யுவானை மகிழ்ச்சியோடு கூப்பிட்டு, ஆரத் தழுவிக்கொண்டார். ''சபாஷ்'' என்று முதுகில் தட்டினார்.*

*''யுவானே வெற்றியாளர்'' என்றார் மன்னர்.*

*யுவான் ஏழையாக இருந்தாலும், விதிமுறைகளைச் சரியாகப் பின்பற்றியதோடு மட்டுமல்லாமல், மறுசுழற்சி செய்யும்வகையில் பாத்திரங்களை உருவாக்கியிருந்ததால், யுவானே வெற்றியாளர் என்று அறிவித்த மன்னர். யுவானுக்கு நிரந்தரப் பணியையும், பொற்காசுகளையும் பரிசாக அளித்தார்.*

*யுவானுக்கு மகிழ்ச்சியோ மகிழ்ச்சி!*

***

# மாயாவின் விளையாட்டு

பா. டோமிளா

*மாயாவின் அம்மாவுக்கு இதயம் சரியாக இல்லை. அதில் ஓட்டை இருந்தது. அதைச் சரி செய்ய லட்சம் ரூபாய் ஆகும் என்றார் டாக்டர். மாயாவுக்கு ஒன்றும் புரியவில்லை.*

*ஒரு ஊரில் கபடி போட்டி நடந்தது. அந்தப் போட்டியில் ஆண்கள் மட்டுமே கலந்துகொண்டனர். மாயா அவர்களிடம் தானும் விளையாட வருவதாகக் கூறினாள். அப்படி விளையாடி ஜெயித்தால் எனக்கு ஒரு லட்சம் தரவேண்டும். நான் தோற்றால் கபடியை விட்டுவிடுவேன் என்றாள்.*

*ஆண் கூட்டத்தில் ஒரு பெண் என்று மாயா சேர்ந்தாள். அவர்கள் விளையாட்டில் மாயா ஒரு ஆணாகத் தோன்றும்படி விளையாடி ஜெயிக்க வைத்தாள். அவளுக்கு ஒரு லட்சம் தந்தார்கள். அவள் அம்மாவின் இதயம் சரியாகிவிட்டது.*

***

# புத்திச்சாலி புறாவும் முட்டாள் பாம்பும்

எஸ். ஜெயஸ்ரீ

ஒரு மரத்தின் கிளையில் இரண்டு புறாக்கள் கூடுகட்டி வாழ்ந்தன. அந்தப் புறாக்களுக்கு இரண்டு குட்டிப் புறாக்கள் பிறந்தன. அவற்றிற்குத் தாய்ப் புறாக்கள் பறக்கக் கற்றுக் கொடுத்தன. அந்தப் புறாக்குடும்பங்கள் சந்தோஷமாக வாழ்ந்து வந்தன.

இதற்கிடையில் அந்தப் புறாக்களுக்குக் கீழே இரண்டு பாம்புகள் வாழ்ந்து வந்தன. "இந்தப் புறாக்களைத் தின்று விடுவோம்" என்று ஒரு பாம்பு இன்னொரு பாம்பிடம் சொன்னதை ஒரு புறா கேட்டது. இதைக் கேட்ட புறா, பாம்புகளுக்குத் தெரியாமல், கூடுகளை மாற்றி விட்டன. இது தெரியாமல் பாம்புகள் மரத்தின்மேலே ஏறின. அவை ஏமாந்து போயின.

அவமானம் தாங்காமல் அந்தப் பாம்புகள் வேறு காட்டிற்குச் சென்றுவிட்டன. திரும்பவும் பழைய மரத்திற்கு வந்தப் புறாக் கூட்டங்கள் சந்தோஷமாக வாழ்ந்தன.

***

# வானத்தில் உயரமாகப் பறத்தல்

ஆங்கிலத்தில் – ஜெகதீஷ் ஜோஷி
தமிழில் – பிரஜன்

*அது ஒரு பிரகாசமான நீலவானம். சிறுவர்கள் பட்டம் விட்டுக் கொண்டிருந்தார்கள். திடீரென்று வானத்திலிருந்து ஒரு பட்டம் அறுந்து வீழ்வதைக் கவனித்தனர்.*

*"ஓ.. பார்! அதன் வில் ஒடிந்துவிட்டது" அமுஸ் கத்தினான்.*

*சிவப்புப் பட்டம் தன் ஒடிந்த வில்லுடன் வட்டம் அடித்தபடி கீழே இறங்கியது.*

*"ஆஹா! அதைப் பிடிப்போம்!" விழுந்துகொண்டிருக்கிற பட்டத்தைப் பார்த்து ஆச்சரியத்துடன் கத்தினான் அமான்.*

*"முடியாது! முடியாது! நான் தான் முதலில் பிடிப்பேன்" கத்தினான் மானவ். "நான் வேகமாக ஓடுவேன். ஓடி அதைப் பிடிப்பேன். யாராலும் அதைத் தொடமுடியாது"*

அவர்கள் வேகமாக ஓடி, பட்டத்தைப் பிடிக்க முயன்றனர்.

பட்டம் தரைக்கு வரும்பொழுது அவர்கள் எகிறிக் குதித்துப் பிடிக்கப் பாய்ந்தனர்.

அவர்களில் ஒருவன் வில்லைப் பிடித்தான். மற்றவர்களால் அதன் காகிகத் துண்டுகளை மட்டும்தான் பிடிக்க முடிந்தது.

ஆனால் அவர்கள் தள்ளுமுள்ளுவில் ஈடுபட்டனர்.

''நிறுத்துங்க! ஏற்கெனவே பட்டம் கிழிந்துவிட்டது'' என்று கத்தினாள் மீட்டா. அவள்தான் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தாள்.

''எனக்கும் பட்டம் விட ஆசை. ஆனால் என்னிடம் காசு இல்லை'' என்றான் விவேக்.

''எனக்கும் ஒரு பெரிய பட்டத்தை வானத்தில் பறக்கவிட ஆசை. ஆனால் பெரிய பட்டம் செய்பவர்கள் யாரும் இல்லை'' என்று மானவ் முணுமுணுத்தான்.

''ஏன் காத்தாடியை கிழிச்சீங்க! மெதுவாக கீழே இறக்கியிருப்பேன்'' என்று அமான் கோபமாகக் கத்தினான்.

''நான் செய்யல. அவன்தான்''

அவர்கள் அனைவரும் ஒருவர்மீது ஒருவர் பழி சுமத்தினர்.

''நான் செய்யல. அவன்தான் என் கையிலிருந்து இழுத்தான்'' என்று சொன்ன மீட்டா, ''புதிய பட்டம் செய்வோம்'' என்றாள்.

''எப்படி? பட்டம் எப்படி செய்வது என்று எங்களுக்குத் தெரியாதே?'' என்று அமன் கேள்வி எழுப்பினான்.

உடன், '' பட்டத்தை நாம் செய்வது அவ்வளவு கஷ்டம்'' என்றான் மானவ்.

''எனக்குப் பட்டம் செய்யத் தெரியும். உங்களுக்குச் சொல்லித் தருகிறேன். என் அப்பா எனக்குச் சொல்லித் தந்தார்'' என்று அடக்கமாகச் சொன்னாள் மீட்டா.

இதைக்கேட்டதும் அவர்களின் முகம் மகிழ்ச்சியில் பிரகாசித்தது.

“அப்படியா?”

விவேக்கோ “ஒவ்வொருவருக்கும் பட்டம் செய்வதானால் சில வாரம் ஆகும். எனக்கு இதில் விருப்பமில்லை” என்றான்.

மீட்டா அனைவரையும் உற்சாகப்படுத்தினாள். அனைவரும் அமர்ந்து தான் சொல்வதைக் கவனமாகக் கேட்கச் சொன்னாள்.

“நாம இன்னிக்குப் பட்டம் செய்யப்போறோம். கொஞ்சம் துடைப்பக் குச்சி, வண்ணத் தாள்கள், கத்திரிகோல், பசை.. தேவைப்படுது. யாராவது உங்கள் வீட்டிலிருந்து கொண்டு வரீங்களா?”

“ஊம்”

அனைவரும் சந்தோஷம் அடைந்தனர். அனைவரும் திடீரென காணாமல் போய், சிறு நேரத்தில் திரும்பி வந்தனர்.

ஒவ்வொரு பையனும் ஏதாவது கொண்டு வந்திருந்தார்கள் – துடைப்பக் குச்சி, வண்ணத்தாள்கள், கத்திரிகோல்கள், வில் பந்து, பசை.

ஒவ்வொரு படியாக மீட்டா அனைவருக்கும் சொல்லி வந்தாள்.

பையன்கள் சொந்தமாகப் பட்டம் தயாரிப்பதில் மும்மர மானார்கள்.

மானவ், “பட்டங்கள் தயாரிப்பது சுவராஸ்யமாக இருக்கிறது” என்றான்.

“நான் சொந்தமாக ஒரு பட்டம் தயாரிப்பேன் என்று தெரியாது” அமான் சொன்னான்.

பையன்கள் சொந்தமாகப் பட்டம் தயாரிப்பதில் மகிழ்ச்சியடைந்தார்கள்.

முதலில் பட்டங்களை வில்லினால் வடிவமைத்தனர்.

*அதன்மீது வண்ணக் காகிதங்களை ஒட்டினர்.*

*சிவப்பு பட்டம், நீல பட்டம், மஞ்சள் பட்டம், பச்சைப்பட்டம் என....*

*ஏழுவண்ணப் பட்டங்கள் உருவாகிவிட்டன.*

*“இந்தப் பட்டங்கள் எவ்வளவு அழகு!”*

*“எனக்குச் சிவப்புப் பட்டம் பிடிச்சிருக்கு!”*

*“எனக்கு நீலம்!”*

*“அழகான மஞ்சள்”*

*பின்னர் ஒவ்வொரு காத்தாடியிலும் சரம் உறுதியாகக் கட்டப்பட்டன.*

*பட்டங்கள் பறக்கத் தயாராகவிட்டன.*

*பையன்களுக்குள் இப்போது சண்டையில்லை. பரந்த மைதானத்தில் அவர்கள் வேகமாக ஓடியபடி, பட்டங்களை விடத் தொடங்கினர்.*

*சில பட்டங்கள் மேலே பறந்தன, சில கீழே விழுந்தன.*

*கீழே பட்டங்கள் தரையிறங்காதவாறு மீட்டா உதவினாள்.*

*“ஆஹா! ஆஹா!”*

*ஏழு வண்ணப் பட்டங்களும் வானத்தில்.*

*அவை மேலே மேலே பறந்தபடி.*

*வெவ்வேறு வண்ணத்தில் பறக்கும் பட்டங்களைப் பார்க்கும்போது, வானவில்போல் தோன்றுகிறது.*

*ஊதா, இன்டிகோ, நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்ச், சிவப்புப் பட்டங்கள்.....*

*வானத்தைப் பார்த்தபடி பையன்கள் சந்தோஷத்தில் குதித்தார்கள்*

*அவர்கள் சேர்ந்து பாடினார்கள்.*

*“உசர உரசமா பறக்குது*

*வானத்துல பறக்குது*

*உன்ன நாங்க விரும்புறோம்*

*ஒன்னா சேர்ந்து விளையாடுவோம்!”*

நன்றி – ஜெகதீஷ் ஜோஷி மற்றும் நேரு பால் புத்தகாலயா, புதுதில்லி.

***

# சிக்கா – சிக் – சிக்

ஆங்கிலத்தில் – ஜெயந்தி மனோகரன்

தமிழில் – பி. ஸ்ரீசக்தி

*சாந்தி மருத்துவமனையில் இருக்கிறாள். அவளுக்கு உடம்பு சரியில்லை.*

*''எனக்கு மருந்துவேண்டாம்''*

*''பார். உனக்கு ராஜு ஒரு பரிசு கொண்டு வந்திருக்கிறான்'' அது ஒரு தந்திரமா? ராஜு எப்போதும் மோசமானவன்.*

*அது கலைடாஸ்கோப்! சாந்தி அதைக் குலுக்கினாள். சிக்கா-சிக்-சிக்!*

*அவள் தன் உருவத்தை கலைடாஸ்கோப்பில் பார்த்தாள்.*

*சாந்தி ஒரு வாயு பலூனில் உயரமாகப் பறந்துகொண்டிருக்கிறாள். சத்தமாக வெடிப்பாக. திடீரென்று இடி மின்னல். பலூன் வெடித்தது.''காப்பாற்றுங்கள்!'' சாந்தி கத்தினாள்.*

*சாந்தி கலைடாஸ்கோப்பைக் குலுக்கினாள். சிக்கா-சிக்-சிக்!*

*பரந்து விரிந்த வயல்வெளிக்கு அருகில், அவள் அப்பா வீடு கட்டியிருக்கிறார். சாந்தி அறுவடையில் மும்முரமாக இருந்தாள். அப்போது ஆரவாரமிட்டும் முண்டியிட்டும் யானைக்கூட்டம். ''ஓடு'' என்று கூச்சலிட்டாள் சாந்தி.*

*சாந்தி கலைடாஸ்கோப்பைக் குலுக்கினாள். சிக்கா-சிக்-சிக்!*

*சாந்தி மாம்பழத்தைக் கசக்கினாள். உடனே தேனீக்கள் ஙொய்ங்..ஙொய்ங் என்று ரீங்காரமிட்டன. அவர்களைச் சுற்றித் துரத்தின.*

*சாந்தி கலைடாஸ்கோப்பைக் குலுக்கினாள். சிக்கா-சிக்-சிக்!*

*சாந்தி தனக்குப் பிடித்த புத்தகங்களைப் படிக்கிறாள், முணுமுணுப்பாக. விடியோ கேம்கள் சுற்றியுள்ளன. ''வேகமாக ஓடு. சீக்கிரமாக!'' என்றாள்.*

*சாந்தி கலைடாஸ்கோப்பைக் குலுக்கினாள். சிக்கா-சிக்-சிக்!*

*மருத்துவமனையின் நினைவுக்கு வந்துவிட்டாள் சாந்தி. மருந்தைச் சாப்பிட்ட சாந்தி தான் நன்றாக இருப்பதாக நினைத்தாள்.*

*''ராஜு, இந்தப் பரிசுக்கு நன்றி! நீ அருமையானவன்!*

நன்றி – ஜெயந்தி மனோகரன்

***

இக்கதைகளை ஒருசேர வாசிக்கும்போது படைப்புகள் யாவும் ஒரு முழுமையை நோக்கிய பயணம் என்றே தோன்றுகிறது. இக்கதைகளில் ஒரு வெகுளித்தன்மை வெளிப்படுவதை உணரமுடிகிறது. சிறிய குழந்தைகளின் படைப்புகளைத் தொகுத்து அவர்களிடம் காட்டும்போது, அவர்கள் முதிர்ந்த எழுத்தாளராகிவிடுகிறார்கள். இது எல்லா அரசுப் பள்ளிகளிலும் நடக்கவேண்டும். நடந்தால் அது மாபெரும் சாதனை.

இங்கே எழுதியிருக்கும் குட்டி எழுத்தாளர்கள் படைப்பின் மணலில் அ என்ற எழுத்தை எழுதிப்பார்த்திருக்கிறார்கள்.

வெளியீடு
இளம் வாசகர் வட்டம்
அறிஞர் அண்ணா அரசு மேனிலைப்பள்ளி
கும்பகோணம்.